டிஜிட்டல் டெய்லி

காலைமணி.காம்

Kaalaimani.com

7.10.2018 ஞாயிற்றுக்கிழமை ● மதுரை ● பக்கங்கள் 26 ● Vol: 1 Issue: 94

# அன்னியச் செலாவணி கையிருப்பு மீண்டும் கடும் பின்னடைவு

## 1 பில்லியன் டாலர் சரிவு

செய்திப்பிரிவு

டாலருக்கு நிகரான ரூபாய் மதிப்பு 74 ரூபாய்க்கும் அதிக சரிவைச் சந்தித்த நிலையில், நாட்டின் அன்னியச் செலாவணி கையிருப்பு அளவில் மீண்டும் பின்னடைவு ஏற்பட்டுள்ளது. இரு வாரங்கள் முன்னேற்றம் கண்ட நிலையில், கடந்த செப்.28ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 1 பில்லியன் டாலருக்கும் அதிகமாக சரிவு ஏற்பட்டுள்ளது.

அன்னியச் செலாவணி இருப்பைப் பொருத்தவரையில், கடந்த 3 மாதங்களாகவே தொடர்ச்சியாக சரிவு ஏற்பட்டு வந்த நிலையில் செப்.14ம் தேதியில் அன்னியச் செலாவணி கையிருப்பில் மீட்சி ஏற்பட்டது. அதனைத் தொடர்ந்து செப்.21ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்திலும் முன்னேற்றம் காணப்பட்டது. இந் நிலையில் மீண்டும் சரிவு ஏற்பட்டுள்ளது.

சுமார் 10 மாதங்களுக்குப் பின்பு, செப்.7ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் அன்னியச் செலாவணி கையிருப்பு மதிப்பு 400 பில்லியன் டாலருக்குக் கீழே குறைந்தது.

நவ.24, 2017க்குப் பின்பு முதன் முறையாக அன்னியச் செலாவணி கையிருப்பு 400 பில்லியன் டாலருக்கும் கீழே சென்றது. கடந்த மூன்று மாதங்களில் அன்னியச் செலாவணி கையிருப்பு 20 பில்லியன் டாலருக்கும் அதிகமாகக் குறைந்துள்ளது.

இந்நிலையில் கடந்த 15 வாரங்களில், முந்தைய இரு வாரங்களில் மட்டுமே அன்னியச் செலாவணி கையிருப்பு தொடர்ச்சியாக உயர்ந்தது குறிப்பிடத்தக்கது. அதேவேளையில் 12 வாரங்கள் கடும் சரிவைச் சந்தித்துள்ளதையும் கணக்கில் கொள்ள வேண்டும்.




நாட்டின் அன்னியச் செலாவணி கையிருப்பு கடந்த செப்.28ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 1.265 பில்லியன் டாலர் சரிவடைந்து 400.525 பில்லியன் டாலராகக் குறைந்துள்ளது. முந்தைய செப்.21ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 401.790 பில்லியன் டாலர் என்ற அளவிலும், செப்.14ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 400.489 பில்லியன் டாலராகவும், செப்.7ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 399.282 பில்லியன் டாலராகவும் அன்னியச் செலாவணி கையிருப்பு இருந்தது.

முன்னதாக, செப்.1ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 400 பில்லியன் டாலராக இருந்தது. ஆக.3ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 402.703 பில்லியன் டாலராகவும், ஜூலை 27ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 404.192 பில்லியன் டாலராகவும், ஜூலை 20ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 405.143 பில்லியன் டாலராகவும் இருந்தது.

Kaalaimani.com in the Tamil Digital daily published and edited by **M.J.Vasudevan**,
18, Chandrakanthi Nagar, Ponmeni, Bye Pass Road, Madurai - 625 016. Phone: 4366425.

ஜூலை 6ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 405.81 பில்லியன் டாலராகவும், ஜுன் 8ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 413.10 பில்லியன் டாலராகவும் இருந்தது.

முன்னதாக டிச.29ம் தேதி மற்றும் பிப்.2ம் தேதியுடன் முடிவடைந்த வாரங்களில் 4 பில்லியன் டாலருக்கும் மேல் அன்னியச் செலாவணி கையிருப்பு உயர்ந்தது. நவ.24ம் தேதிக்குப் பின்பு அன்னியச் செலாவணி கையிருப்பு தொடர்ச்சியாக 400 பில்லியன் டாலர் மதிப்புக்கு மேலேயே நீடித்து வந்தது. கடந்த செப்.7ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் மட்டும் 400 பில்லியன் டாலருக்குக் கீழே குறைந்தது. மீண்டும் கடந்த 3 வாரங்களாக 400 பில்லியன் டாலருக்கும் அதிகமாகவே நீடிக்கிறது.

ஒட்டு மொத்த அன்னியச் செலாவணி கையிருப்பில் பெரிய அளவிலான பங்கு வகிக்கும் அன்னிய நாணயச் சொத்து மதிப்பானது கணக்கீட்டு வாரத்தில் 1.169 பில்லியன் டாலர் சரிவடைந்து 376.243 பில்லியன் டாலர் என்ற அளவில் உள்ளது.

அமெரிக்க டாலர் மதிப்பில் குறிப்பிடப்படும் அன்னிய நாணய சொத்துக்கள், கையிருப்பில் உள்ள இதர யூரோ, பவுண்ட், யென் போன்ற நாணயங்களின் அமெரிக்க டாலருக்கு எதிரான ஏற்ற, இறக்க தாக்கங்களுக்கு உட்பட்டது எனவும் ரிசர்வ் வங்கி குறிப்பிட்டுள்ளது. எனினும் டாலர் தவிர்த்த இதர நாணய மதிப்பிலான தொகைகள், பங்குகள் மற்றும் பத்திரங்களின் மதிப்பு, மொத்த சொத்து மதிப்பில் 20-30 சதம் என்ற அளவில் மட்டுமே உள்ளது.

செப்.28ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் இந்தியாவின் தங்கக் கையிருப்பு மதிப்பு 70.7 மில்லியன் டாலர் குறைந்து 20.343 பில்லியன் டாலராக உள்ளது. முந்தைய செப்.21ம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் தங்கக் கையிருப்பு 35 மில்லியன் டாலர் உயர்ந்தது. கணக்கீட்டு வாரத்தில் சர்வதேச நிதியத்தில் இந்தியாவின் சிறப்பு எடுப்பு உரிமமானது 10.4 மில்லியன் டாலர் குறைந்து 1.470 பில்லியன் டாலராக உள்ளது. அதேவேளையில் நிதியிருப்பு நிலையானது 14.6 மில்லியன் டாலர் குறைந்து 2.468 பில்லியன் டாலராக உள்ளது.

ரிசர்வ் வங்கி வெளியிட்டுள்ள புள்ளி விபரங்களில் இந்தத் தகவல்கள் இடம் பெற்றுள்ளன.



# வீனஸ்
## எலக்ட்ரானிக்ஸ்

**FINANCE BY**




**UPTO 100%* CASH BACK BAJAJ FINSERV OFFER**

DAIKIN

**1.5 TON INVERTER AC**




Spl.price
₹ 34,900/-U/E

SONY 32" LED



Spl.price
₹ 23,000/-

EMI
₹ 1,919/-



LG
Frost Free Refrigerator
260 Ltr

EMI
₹ 1,666/-

₹1/-
மட்டும் முன்பணமாக செலுத்தி Split A/C & LED TV-ஐ எடுத்துச்செல்லுங்கள்

0% வட்டி

மிகக் குறைந்த விலை

Enquiries : 73730 60000, E-mail : info@venusgroups.in, Customer Care : 92444 36366 E-mail : customercare@venusgroups.in

# பரஸ்பர நிதி நிறுவனங்களின் சொத்து மதிப்பு 14 சதவீதமாக உயர்வு

புது தில்லி, அக்.6

பரஸ்பர நிதி நிறுவனங்களின் சொத்து மதிப்பு செப்டம்பர் காலாண்டில் 14 சதவீதம் அதிகரித்துள்ளது.

இதுகுறித்து இந்திய பரஸ்பர நிதியங்களின் கூட்டமைப்பு வெளியிட்ட புள்ளிவிவரத்தில் தெரிவித்துள்ளதாவது: பரஸ்பர நிதி திட்டங்களில் சில்லறை முதலீட்டாளர்களின் பங்களிப்பு தொடர்ந்து சிறப்பான அளவில் உள்ளது. அதிலும், சிறிய நகரங்களிலிருந்து வரும் முதலீடுகள் கணிசமான அளவில் அதிகரித்துள்ளன. இதன் காரணமாக, நடப்பாண்டு ஜூலை முதல் செப்டம்பர் வரையிலான மூன்று மாத காலத்தில் பரஸ்பர நிதி நிறுவனங்கள் நிர்வகிக்கும் சொத்து மதிப்பு ரூ.24 லட்சம் கோடியாக உயர்ந்துள்ளது. கடந்தாண்டு இதே கால அளவில் காணப்பட்ட சொத்து மதிப்பான ரூ.21 லட்சம் கோடியுடன் ஒப்பிடுகையில் இது 14 சதவீதம் அதிகம்.




நடப்பாண்டு ஏப்ரல் முதல் ஜூன் வரையிலான காலாண்டில் காணப்பட்ட சொத்து மதிப்பான ரூ.23.4 லட்சம் கோடியுடன் ஒப்பிடு கையில் இது வெறும் 2.5 சதவீதம் மட்டுமே அதிகம் என்பது குறிப் பிடத்தக்கது. பரஸ்பர நிதி துறையில் ஈடுபட்டுள்ள 41 நிறுவ னங்களில், 33 நிறுவனங்கள் நிர்வகிக்கும் சொத்து மதிப்பானது வளர்ச்சியடைந்துள்ளது. அதேசமயம், 8 நிறுவனங்களின் சொத்து மதிப்பு சரிவடைந்துள்ளது. ஐசிஐசிஐ புருடென்ஷியல் பரஸ்பர நிதி நிறுவனத்தின் சொத்து மதிப்பு ரூ.3,10,257 கோடியை எட்டி முதலிடத்தில் உள்ளது. இதனைத் தொடர்ந்து ஹெச்டிஎஃப்சி (ரூ.3,06,360 கோடி), ஆதித்யா பிர்லா சன் லைஃப் (ரூ.2,54,207 கோடி) ஆகிய நிறுவனங்கள் உள்ளன.

இவை தவிர, ரூ.2,53,829 கோடி சொத்து மதிப்புடன் எஸ்பிஐ 4வது இடத்திலும், ரூ.2,40,445 கோடி சொத்து மதிப்புடன் ரிலையன்ஸ் பரஸ்பர நிதி நிறுவனம் 5வது இடத்திலும் உள்ளதாக பரஸ்பர நிதியங்களின் கூட்டமைப்பு புள்ளி விவரத்தில் தெரிவித்துள்ளது.

# கூகுள் பிளே ஸ்டோரில் ட்ரூ காலர் சாட் இடம் பெற்றது




புது தில்லி, அக.6

பிரபல இணைய வழி மொபைல் அழைப்பு சேவை நிறுவனமான ட்ரூ காலர் நிறுவனம் தற்போது சாட் எனப்படும் உடனடி குறுந்தகவல் சேவை செயலியை அறிமுகப்படுத்தியுள்ளது. ஏற்கனவே ஆண்ட்ராய்டு பீட்டா தளத்தைப் பயன்படுத்தும் மொபைல்களில் நேரடியாக ட்ரூ காலர் சாட் சோதனை முறையில் பயன்படுத்தப்பட்டு வரும் நிலையில் தற்போது கூகுள் பிளே ஸ்டோரில் தரவிறக்கம் செய்யும் வசதி அளிக்கப்பட்டுள்ளது. இந்தச் சேவை ஓரிரு வாரங்களில் பயன்பாட்டுக்கு வரும் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஏற்கனவே வாட்ஸ் அப் உள்ளிட்ட இணைய வழி குறுந்தகவல் சேவை செயலிகள் பிரபலமாக உள்ள நிலையில், அந்தத் தளத்தில் ட்ரூ காலர் நிறுவனமும் கால் பதித்துள்ளது. தவறான இணைப்புகள் மற்றும் வதந்திகளைத் தடுக்கும் அம்சங்களுடன் இந்த செயலி அமைந்துள்ளதாக அந் நிறுவனம் தெரிவித்துள்ளது. இந்நிறுவனம் சமீபத்தில் 2ம் தலைமுறை போன்களில் பயன்படுத்தும் யூபிஐ அடிப்படையிலான பணபரிமாற்ற சேவையை அண்மையில் பயன்பாட்டுக்குவந்தது.

ஏற்கெனவே, அழைப்பு எண்கள் குறித்த தகவல் மற்றும் குறுந்தகவல் எண்கள் குறித்த தகவல் சேவையை இந்நிறுவனம் வழங்கி வருகிறது. தற்போது உடனடி குறுந்தகவல் சேவையை அமல்படுத்துவதன் மூலம் இந்திய மொபைல் போன் பயனீட்டாளர் சந்தையில் மேலும் தன்னை வலுப்படுத்திக்கொண்டுள்ளது.

வாட்ஸ் அப் போன்று இல்லாமல், மொபைல் போன்களுக்கு வரும் தேவையற்ற அழைப்புகள் மற்றும் பொய்யான தகவல் பரிமாற்றத்தைத் தடுக்கும் ஒருங்கிணைந்த காலர் ஐடி சேவையாக இது அமையும். இந்தியாவில் அன்றாடம் 200 மில்லியன் வாடிக்கையாளர்கள் வாட்ஸ் அப் சேவையையும், 100 மில்லியன் வாடிக்கையாளர்கள் ட்ரூ காலர் சேவையையும் பயன்படுத்துகின் றனர். இதில் 60 சதம் பேர் இந்திய வாடிக்கையாளர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. கூடுதலாக, வாடிக்கையாளர்களுக்கு வசதியாக குறுந்தகவல் பரிமாற்ற முறையிலிருந்து சாட்டிங் முறைக்கு தானாகவே மாறிக் கொள்வது போன்ற சிறப்பு அம்சங்களை இச்சேவை கொண்டுள்ளது.

ஆப்பிள் நிறுவனத்தின் ஐ மெசேஜ் போன்று ட்ரூ காலர் சாட் செயல்படும். அதாவது, ட்ரூ காலர் வாடிக்கையாளர்களுக்கிடையே இது ஓர் இலவச சேவையாகவும், மற்ற வாடிக்கையாளர்களுக்கு குறுந்தகவல் மூலமாகவும் இந்நிறுவனத்தின் தகவல்கள் போய்ச்சேர இந்த ஆப் துணைபுரியும் என்று டெக் க்ரஞ்ச் நிறுவனத்துக்கு அளித்த ஓர் அறிக்கையில் ட்ரு காலர் பிரதிநிதி ஒருவர் தெரிவித்துள்ளார்.

தேவையற்ற மற்றும் பொய்யான தகவல்களைப் பரிமாறும் இணைய வழி இணைப்புகளைத் தடுப்பதே இந்த சேவையின் நோக்கம். ட்ரூ காலர் கடந்த 2015ல் குறுந்தகவல் பரிமாற்றப் பயன்பாட்டு சேவை பிரத்யேகமாக இந்தியாவில் செயல்பாட்டுக்குக் கொண்டு வந்தது. குறுந்தகவல் அனுப்பும் நபரை அறிய இச்சேவை வழிவகைசெய்தது. இந்தியாவில் ட்ரூ காலர் பயன்பாட்டாளர்கள் எண்ணிக்கையை அதிகரிக்கும் வகையில் இச்சேவை அமல்படுத்தப்பட்டது.

## டிஜிட்டல் கட்டண சேவை தளம்: ஜோமேட்டா அறிமுகம்

புது தில்லி, அக்.6

ஆன்லைன் உணவு விற்பனை நிறுவனமான ஜோமாட்டோ, கணினி மற்றும் மொபைல் போன் மூலம் பணம் செலுத்தும் டிஜிட்டல் கட்டண சேவை வாலட்டை விரைவில் அறிமுகப்படுத்த வுள்ளது. ஓரிரு மாதங்களில் இவ்வசதியை வாடிக்கையாளர்கள் பெறமுடியும் என இந்நிறுவனம் தெரிவித்துள்ளது. இதுவரை இந்நிறுவன வாடிக்கையாளர்கள், பே டிஎம் மற்றும் மொபிக்விக் சேவைகளின் மூலம் பணம் செலுத்தி வந்தனர். தற்போது தனது சொந்த ஆப் மூலம் பணம் செலுத்தும் புதிய வசதியை ஜோமேட்டா நிறுவனம் கொண்டுவரவுள்ளது.

தடையின்றி பணத்தைச் செலுத்தும் வகையிலும், வாடிக்கையா ளர்களைத் தக்கவைத்துக்கொள்ளும் முயற்சியாகவும் இச்சேவை துவங்கப்படவுள்ளது.இந்த புதிய டிஜிட்டல் பணம் செலுத்தும் சேவை மூலம் ஜோமாட்டோ கோல்ட் மற்றும் ஜோமாட்டோ பிக்கி பாங்க் போன்ற திட்டங்களை அறிமுகப்படுத்தி, தனது வாடிக்கையாளர் களுக்கு பல்வேறு சிறப்புச் சலுகைகளையும், கேஷ்பேக் எனக் குறிப்பிடப்படும் குறிப்பிட்ட அளவு பணத்தை திருப்பி அளிக்கும் சலுகையையும் அமல்படுத்தவுள்ளதாக இந்நிறுவனச் செய்திக் குறிப்பு தெரிவிக்கிறது. ஓலா, ஃபிளிப்கார்ட், அமேசான் போன்ற முன்னணி ஆன்லைன் சேவை நிறுவனங்கள் தங்களுக்கான சொந்த டிஜிட்டல் முறையிலான பணம் செலுத்தும் வசதியை வழங்கிவருவதைத் தொடர்ந்து தற்போது ஜோமாட்டோ நிறுவனமும் இச்சேவையை அறிமுகப்படுத்தவுள்ளது குறிப்பிடத்தக்கது.

# ஈரான் மூலம் ஏற்படும் கச்சா எண்ணெய் இழப்பு சவுதி அரேபியா சரிகட்டும்: முகமது பின் சல்மான்



ரியாத், அக்.6

ஈரான் மூலம் ஏற்படும் கச்சா எண்ணெய் இழப்பை, சவுதி அரேபியா சரிகட்டும் என இளவரசர் முகமது பின் சல்மான், அமெரிக்காவுக்கு உறுதி யளித்துள்ளார்.

அணு ஆயுத உற்பத்தி தடை தொடர்பாக 2015ம் ஆண்டு செய்துகொண்ட ஒப்பந்தத்தை ஈரான் மீறியதாகக் கூறி அந்த ஒப்பந்தத்தில் இருந்து அமெரிக்கா விலகுவதாக, அந்நாட்டு அதிபர் டிரம்ப் கடந்த மே மாதம் அறிவித்தார். அதைத்தொடர்ந்து, ஈரானுக்கு எதிரான சில பொருளாதாரத் தடைகளை ஆகஸ்ட் 6ம் தேதி அமெரிக்கா அமல்படுத்தியது.

ஈரானிடம் இருந்து பிற நாடுகள் கச்சா எண்ணெய் இறக்குமதி செய்வதை தடுப்பது, அந்நாட்டுக்கான சர்வதேச வங்கிச் சேவைகளை முடக்குவது உள்ளிட்ட பொருளாதாரத் தடைகள் அடுத்த மாதம் 4ம் தேதி முதல் அமலுக்கு வருவதாக அமெரிக்கா கூறியிருந்தது. இந்தத் தடை இந்தியாவுக்கு மிகுந்த பாதிப்பை ஏற்படுத்தக் கூடும் எனக் கருதப்பட்டது.

ஈரானிடம், கச்சா எண்ணெய் வாங்குவதற்கு ஐரோப்பிய வங்கிகள் மூலமாக யூரோக்களில் இந்தியா பணம் செலுத்தி வந்தது. அமெரிக்காவின் தடை அமலாகும் பட்சத்தில் இந்த பரிவர்த்தனை முடக்கப்படும். இந்நிலையில், ஈரானிடம் இருந்து அடுத்த மாதம் 1.25 மில்லியன் டன் கச்சா எண்ணெய் இறக்குமதி செய்வதற்கு பொதுத்துறை நிறுவனங்களான இந்தியன் ஆயில் கார்ப்பரேசன் (ஐஓசி), மங்களூரு ரிஃபைனரி பெட்ரோ கெமிக்கல்ஸ் லிமிடெட் ஆகியவை ஒப்பந்தம் செய்துள்ளன.

மாதந்தோறும் வழக்கமாக இறக்குமதி செய்யும் அளவிலேயே தற்போதும் கச்சா எண்ணெய் இறக்குமதி செய்ய ஐஓசி நடவடிக்கை எடுத்துள்ளதாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

அமெரிக்கா விதித்துள்ள பொருளாதார தடையால், கச்சா எண்ணெய் விற்பனையில் ஈரான் அரசு சிக்கி வருகிறது. அதே நேரத்தில் கச்சா எண்ணெய் விநியோகம் குறைந்துள்ளதால், சர்வதேச சந்தையில் கச்சா எண்ணெய் விலையும் அதிகரித்துள்ளது.

ஈரான் மூலம் ஏற்படும் கச்சா எண்ணெய் இழப்பை சரிகட்டுமாறு, சவுதி அரேபியா உள்ளிட்ட பெட்ரோல் ஏற்றுமதி கூட்டமைப்பு நாடுகளுக்கு அமெரிக்க அதிபர் டிரம்ப் கோரிக்கை விடுத்தார். தொடக்கத்தில், அவரது கோரிக்கையை நிராகரித்த சவுதி அரேபியா, தற்போது டிரம்பின் கோரிக்கையை ஏற்றுக் கொள்வதாக அறிவித்துள்ளது. உலகின் மிகப்பெரிய எண்ணெய் ஏற்றுமதியாளராக உள்ள சவுதி அரேபியா, சமீபத்திய கச்சா எண்ணெய் உயர்வுக்கு ஈரான் காரணம் இல்லை என நம்புவதாக இளவரசர் முகமது பின் சல்மான் தெரிவித்துள்ளார்.

சவுதி அரேபியா குவைத்துடனான முதலீட்டாளர்களுடன் எண்ணெய் வளத்தை மீண்டும் தொடங்கும் என நம்புவதாகவும், அடுத்த 5 முதல் 10 ஆண்டுகளுக்கு தொடர்ந்து உற்பத்தி செய்ய குவைத்துடன் ஒரு ஒப்பந்தத்தை கொண்டிருப்பதாகவும், இதனால் சவுதி அரேபியாவிற்கும் குவைத்திற்குமான எண்ணெய் உற்பத்தி திறன் அதிகரிக்கக்கூடும் என தெரிவிக்கப்பட்டுள்ளது.

## புதிய ஏஎம்ஜி 63 சொகுசு ரக கார்

# இந்திய சந்தையில் மெர்சிடிஸ் பென்ஸ் அறிமுகம்

புது தில்லி, அக்.6

ஜெர்மனியைச் சேர்ந்த மெர்சிடிஸ்-பென்ஸ் நிறுவனம், ஏஎம்ஜி ஜி 63 என்ற புதிய ரக சொகுசுக் காரை இந்திய சந்தையில் அறிமுகப்படுத்தியது. இதுகுறித்து மெர்சிடிஸ்-பென்ஸ் இந்தியா நிறுவனத்தின் துணைத் தலைவர் மைக்கேல் ஜாப் செய்தியாளர்களிடம் கூறியதாவது: இப்புதிய ஜி63 காரில் 4லிட்டர் வி8 பைடர்போ பெட்ரோல் என்ஜின் பொருத்தப்பட்டுள்ளது. இது, 585 ஹைச்பி திறன் கொண்டது. அதன் மூலம், 100 கி.மீ. முதல் 220 கி.மீ. வேகத்தை 4.5 நொடிகளில் எட்ட முடியும். கரடு முரடான பாதைகளில் செல்லக்கூடிய ஸ்போர்ட்ஸ் கார் செயல்பாட்டை விரும்புவர்களுக்கு, ஜி63 ஒரு வரப்பிரசாதமாகும். இதன் விலை ரூ.2.19 கோடியாக நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. பண்டிகை காலம் வரவிருப்பதையடுத்து நிறுவனம் இதுபோன்ற புதுமையான கார்களின் அறிமுகத்தை தொடர்ந்து மேற்கொள்ளும் என்றார் அவர்.







*Wedding*
*Silk*
Collections

காஞ்சிபுரம், தர்மாவரம்,
ஆரணி, பனாரஸ்,
பேன்சி பட்டுச் சேலைகள்,
மில் சேலைகள்
பேன்சி சேலைகள்,
சுடிதார் மெட்டீரியல்கள்,
சர்டிங், சூட்டிங்ஸ்
மற்றும் ரெடிமேட்ஸ்.

# ராஜ்மஹால்

வெங்கலக்கடைத் தெரு, மதுரை-1.
போன்-2622647, 2666666

தொட்டுத் தொடரும் ஒரு பட்டுப் பாரம்பரியம்.

# இந்திய பொருளாதாரம் உயர் வளர்ச்சியில் தொடரும்

## நிதியமைச்சர் அருண்ஜேட்லி தகவல்



புது தில்லி, அக்.6

இந்திய பொருளாதாரம் அடுத்த 20 ஆண்டுகளுக்கு உயர் வளர்ச்சியில் தொடரும் என்றும், சீனாவை விட இந்திய பொருளாதாரம் சிறப்பாக இருக்கும் என்றும் மத்திய நிதியமைச்சர் அருண்ஜேட்லி கூறியுள்ளார்.

தில்லியில் இந்துஸ்தான் டைம்ஸ் கருத்தரங்கில் பங்கேற்றுப் பேசிய மத்திய நிதியமைச்சர் அருண்ஜேட்லி, எதிர்க்கட்சிகள் அமைக்க முயலும் மெகா கூட்டணி மூலம் ஆட்சி என்பது, கொள்கைகளை கொலைசெய்து, அரசும் சில மாதங்களே நீடிக்கும் ஒரு பரிசோதனை என்று அவர் கூறினார்.

கேட்பதற்கு கோலாகலமாக இருக்கும் இந்த மெகா கூட்டணி யோசனை என்பது ஏற்கெனவே இந்தியாவில் முயற்சித்தும், பரி சோதித்தும் பார்த்து தோல்வியடைந்த ஒன்று என்று அருண் ஜேட்லி தெரிவித்தார். மத்திய அரசின் பல்வேறு நலத்திட்டங்கள் பற்றிப் பேசிய அருண்ஜேட்லி, ஏழைகள் படிப்படியாக வறுமை நிலையிலிருந்து கைதூக்கிவிடப்படுவதாக கூறினார்.

இந்தியா அடுத்த 20 ஆண்டுகளுக்கு உயர்பொருளாதார வளர்ச்சியை தொடரும் என்றும், சீனாவைவிட சிறப்பாக செயல்படும் என்றும் மத்திய நிதியமைச்சர் தெரிவித்தார். கச்சா எண்ணெய் விலை உயர்வும், டாலருக்கு நிகரான ரூபாய் மதிப்பு வீழ்ச்சியும் உலகளாவிய காரணிகளை சார்ந்தது என்றும், தற்காலிகமானது என்றும் அருண்ஜேட்லி விளக்கமளித்தார்.

# நடப்பாண்டில் சிமெண்ட் உற்பத்தி 6—7 சதம் அதிகரிக்கும்: ஐசிஆர்ஏ தகவல்

புது தில்லி, அக்.6

நடப்பு நிதியாண்டில் சிமெண்ட் உற்பத்தி 6% முதல் 7% வரை அதிகரிக்கும் என ஐசிஆர்ஏ ஆய்வறிக்கையில் கூறப்பட்டு உள்ளது.

வீடு கட்டுவதில் ஆர்வம் மற்றும் ஊரகப் பகுதிகளில் கட்டுமானப் பணிகள் அதிகரித்து வருவதற்கு இணையாக சிமெண்ட் உற்பத்தியும் அதிகரிக்கக்கூடும் என முதலீட்டு தகவல்கள் மற்றும் கடன் அளவீட்டு நிறுவனம் (ஐசிஆர்ஏ) மேற்கொண்ட ஆய்வுகளில் தெரிய வந்துள்ளது. வீடு, சாலைகள், குடிநீர் விநியோகம் என உள்கட்டமைப்பு கட்டுமான அபிவிருத்தி பணிகள் நாடு முழுவதும் பரவலாக நடைபெற்று வருவதால் சிமெண்ட் உற்பத்தி 6லிருந்து 7 சதவீதம் அதிகரிக்கும். உற்பத்தி அதிகரித்தாலும், சிமெண்ட் ஆலைகளில் அடுத்த காலாண்டுக்கான உற்பத்தி செலவினங்களில் ஏற்படும் நெருக்கடிகளைப் பொறுத்து லாபம் அமையக்கூடும்.

நடப்பு நிதியாண்டின் ஏப்ரல், மே ஜூன் மாதங்களில் உற்பத்தி 27.5லிருந்து 28.6 மில்லியன் டன்னாக இருந்தது. ஆண்டு அடிப்படையில் சிமெண்ட் உற்பத்தி ஒவ்வொரு ஆண்டும் 14.7 சதவீதம் அதிகரித்து வருகிறது. மாதாந்திர அடிப்படையில் ஜூலையில் உற்பத்தி வீழ்ச்சியை சந்தித்தது. தேவை அதிகரிப்பு, நாட்டின் கிழக்கு மாநிலங்களிலும் (பீகார் தவிர்த்து), ஆந்திரா, தெலங்கானா மாநிலங்களில் லட்சக்கணக்கில் கட்டப்பட்டு வரும் மலிவு விலை வீடுகள், கிழக்கு மற்றும் மேற்கு மண்டலங்களில் உள்கட்டமைப்பு வசதிகள் அதிகரித்து வருவதற்கு இணையாக சிமெண்ட் உற்பத்தியும் அதிகரிக்கும். நிதியாண்டின் முதல் 5 மாதங்களில் கிழக்கு மண்டலத்தைக் காட்டிலும் வடக்கு மற்றும் தெற்கு மண்டலங்களில் சிமெண்ட் விலை மூட்டைக்கு ரூ.25 முதல் ரூ.30 வரை குறைவாக உள்ளது.

உற்பத்தி ஆலைகளில் பயன்படும் எரிபொருளின் விலை உயர்வு, டீசல் விலை அதிகரிப்பால் நிதிச்சுமை போன்றவை சிமெண்ட் உற்பத்தி ஆலைகளின் லாபம் மற்றும் கடன் சுமைகளில் கூடிய விரைவில் தாக்கம் உருவாக்கும். எனவே விலை மாற்றத்தை ஆலைகளுக்கு ஏற்படும் பொருளாதார நெருக்கடிகளுடன் ஒப்பீடு செய்யும் தகுதியை ஆலைகள் வளர்த்துக் கொள்ள வேண்டும் என அந்த ஆய்வில் கூறப்பட்டுள்ளது.

# புதிய காம்பேக்ட் ஃபோர்டு ஆஸ்பியர் கார் இந்தியாவில் அறிமுகம்

சென்னை, அக்.6

இந்திய வாடிக்கையாளர்களுக்கு ஃபோர்டு இந்தியா தனது காம்பேக்ட் செடான், புதிய ஃபோர்டு ஆஸ் பியரை சென்னையில் அறிமுகம் செய்துள்ளது. பவர், ஸ்டைல் அண்ட் பொருளின் இணைப்பினைக் கொண்ட புதிய ஃபோர்டு ஆஸ்பியர், பல பிரிவு சிறந்த தொழில் நுட்பங்களுடன், காம்பேக்ட் செடானில் சிறந்த பாதுகாப்பு, ஃபன் டூ ட்ரைவ் ட்.என்.ஏ மற்றும் உரிமையாளர்களின் காஸ்ட் ஆகியவற்றை வழங்கும். புதிய 1.2லி பெட்ரோல் மற்றும் நம்பகமான 1.5லி டீசல் எஞ்சினுடன், இவை 5 ஸ்பீட் மேனுவல் டிரன்ஸ்மிசன் உடன் இணைக்கப்பட்டுள்ளன. முதல் ஐந்து வருடத் துக்கு அல்லது 10000 கி.மீ.,க்கு உத்திரவாதம். இரண்டு எரிபொருள் தேர்வுகள் மற்றும் ஏழு நிறங்கள் ஆகியவற்றில் ஐந்து வகைகளில் இந்த கார் கிடைக்கிறது. அறிமுக நிகழ்வில் ஃபோர்டு இந்தியா உற்பத்திப் பிரிவின் செயல் இயக்குனர் ஆர்.பாலசுந்தரம், புதிய ஆஸ்பியர் குறித்த சிறப்பம்சங்கள் பற்றி விளக்கமாக தெரிவித்தார்.




# திருப்பதி கோவில் உண்டியல் வருமானம் செப்டம்பரில் ரூ.87.84 கோடி

திருமலை, அக்.6

திருப்பதி ஏழுமலையான் கோயிலில் கடந்த செப்டம்பர் மாதத்தில் மட்டும் உண்டியல் மூலம் ரூ.87.84 கோடி வருமானம் கிடைத்துள்ளது. இது கடந்த ஆண்டு உண்டியல் காணிக்கையைவிட ரூ.11.56 கோடி அதிகம். திருப்பதி ஏழுமலையான் கோயிலில் கடந்த செப்டம்பர் மாதம் உண்டியல் மூலம் பக்தர்கள் ரூ.87.84 கோடி காணிக்கை செலுத்தி உள்ளனர். இதுவே கடந்த ஆண்டு செப்டம்பர் மாதம் ரூ. 76.28 கோடி காணிக்கையாக செலுத்தப்பட்டுள்ளது.

கடந்த செப்டம்பர் மாதத்தில் 23.38 லட்சம் பக்தர்கள் சுவாமி தரிசனம் செய்துள்ளனர். லட்டு பிரசாதம் 97.87 லட்சம் விற்பனை செய்யப்பட்டுள்ளது. 63.49 லட்சம் பக்தர்களுக்கு அன்னதானம் செய்யப்பட்டுள்ளது. 9.82 லட்சம் பக்தர்கள் தலைமுடி காணிக்கை செலுத்தி யுள்ளனர். தங்கும் விடுதிகள் வாடகை மூலம் ரூ.5.93 கோடி வருவாய் கிடைத்துள்ளது. இந்த தகவல்களை திருமலை திருப்பதி தேவஸ்தானம் தெரிவித்துள்ளது.



மதுரை தமுக்கம் மைதானத்தில் அமைக்கப்பட்டுள்ள காந்தி ஷில்ப் பஜார் கண்காட்சி மற்றும் விற்பனையை ஆட்சியர் ச.நடராஜன் திறந்து வைத்து பார்வையிட்டார்.




சேலம் சிஎஸ்ஐ பாலிடெக்னிக் கல்லூரியில் நடைபெற்ற வன உயிரின வாரவிழாவில் ஆட்சியர் ரோஹிணி, பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுக்கு சான்றிழ்களை வழங்கினார்.




கிருஷ்ணகிரி மாவட்டம் ஓசூரில் உலக விண்வெளி வாரத்தை யொட்டி அதியமான் பொறியியல் கல்லூரியில், செயற்கை கோள் மற்றும் சேட்டிலைட் கண்காட்சியை அமைச்சர் பா.பாலகிருஷ்ணா ரெட்டி துவக்கி வைத்து உரையாற்றினார்.

# இந்தியா—ரஷ்யா இடையே வைர வர்த்தகம் அமைச்சர் சுரேஷ் பிரபு யோசனை

புது தில்லி, அக.6

இந்தியா-ரஷ்யா இடையே, வைர இறக்குமதி, ஏற்றுமதி தொடர்பாக, அரசு மட்டத்தில் ஒப்பந்தம் மேற்கொள்ள வேண்டும், என மத்திய வர்த்தகம் மற்றும் தொழில் துறை அமைச்சர், சுரேஷ் பிரபு தெரிவித்துள்ளார்.



அவர், இந்திய தொழிலக கூட்டமைப்பின் கருத்தரங்கில் மேலும் பேசியதாவது: ரஷ்யாவில், அபரி மிதமான வைர வளம் உள்ளது. இந்தியா, உலகிலேயே வைரங்களை வெட்டி, பட்டை தீட்டும் தொழிலில் முதலிடத்தில் உள்ளது. ஆகவே ரஷ்யா, வைரங்களை இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யலாம். அவற்றை நறுக்கி, பட்டை தீட்டப்பட்ட வைரங்களாக மாற்றி, இந்தியா மறுபடியும் ரஷ்யா வுக்கு ஏற்றுமதி செய்யலாம். இதனால், இரு நாடுகள் இடையே, நடப்பு கணக்கு பற்றாக்குறை எந்தவிதத்திலும் பாதிக்காது. இரு நாடுகளும் பயன் பெறலாம். இதற்காக, இரு நாடுகளும், அரசு மட்டத்தில் ஒப்பந்தம் செய்து கொள்வது நல்லது.

ரஷ்யா, இந்தியாவிற்கு மரங்களை ஏற்றுமதி செய்ய விரும்பி னாலும், அது குறித்த செயல் திட்டத்தை உருவாக்கலாம். ரஷ்ய நிறுவனங்கள், இந்தியாவில் சுலபமாக தொழில் துவங்க, ஒற்றைச் சாளர முறை அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. இதன் மூலம், ஒரே அமைச்சகத்தின் கீழ், அனைத்து துறைகளின் ஒப்புதலையும் பெறலாம். தில்லி-மும்பை நெடுஞ்சாலை தொழில் தடத்தில், ரஷ்ய நிறுவனங்களுக்கு தனி இடம் ஒதுக்கப்படும். இவ்வாறு அவர் கூறினார்.

# நேரம் தவறாமையைக் கடைப்பிடிக்கும் நிறுவனமாக ஸ்ரீலங்கன் ஏர்லைன்ஸ் தேர்வு




புது தில்லி, அக்.6

உலகிலேயே நேரம் தவறாமையைக் கடைப்பிடிக்கும் விமானம் என்ற பெயரை ஸ்ரீலங்கன் ஏர்லைன்ஸ் பெற்றுள்ளது. இதுகுறித்து ஷின்ஹுவா செய்தி நிறுவனம் நடத்திய ஆய்வில் கடந்த செப்டம்பர் மாதத்தில் இலங்கை அரசுக்குச் சொந்தமான ஸ்ரீலங்கன் ஏர்லைன்ஸ் விமானங்கள் 91 புள்ளி 37 சதம் நேரம் தவறாமையைக் கடைப்பிடித்ததாக தெரிவிக்கப்பட்டுள்ளது. இதற்காக பிளைட் ஸ்டேட்ஸ் என்ற நிறுவனம் ஆய்வு நடத்தியதாகவும், அப்போது ஐரோப்பா, வட அமெரிக்கா, ஆசியா, மத்திய கிழக்கு மற்றும் தென் அமெரிக்காவைச் சேர்ந்த 41 விமான நிறுவனங்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த ஆய்வில் ஸ்ரீலங்கன் ஏர்லைன்ஸ் விமானம் உலகிலேயே நேரம் தவறாமையைக் கடைப்பிடிப்பது தெரியவந்துள்ளது.

## காஷ்மீர் பாரமுல்லாவில்

# இலவச செயற்கை மூட்டுகள் வழங்கும் முகாம்

சென்னை, அக்.6

இந்திய ராணுவத்தின் பீர்பாஞ்சல் படைப்பிரிவின் ஒத்துழைப்போடும் உதவியோடும், ஸ்பார்க் பிண்டா நிறுவனம் சமூக மேம்பாட்டுக்காக பல்வேறு பணிகளை மேற்கொண்டு வருகிறது. அதன் ஒரு பகுதியாக ஜம்மு காஷ்மீர் பாரமுல்லாவில் உள்ள போனியார் இளைஞர் மையத்தில் செயற்கை மூட்டு துணைக்கருவி வழங்கும் 8 நாட்கள் முகாமை இவை இணைந்து நடத்தின.

இந்த முகாமை இராணுவம் சத்பாவனா திட்டத்தின் கீழ் ஸ்பார்க் மிண்டாவுடன் இணைந்து நடத்தியது. செப்டம்பர் 16 முதல் 22 தேதி வரை நடந்த இந்த முகாமில் 300க்கும் மேற்பட்ட மாற்றுத் திறனாளிகளுக்கு செயற்கை மூட்டு துணைக்கருவி வழங்கப்பட்டது. மூட்டுத் துணைக்கருவி, கேலிப்பர் ஃபிட்மெண்ட், வாக்கர்கள், எல்போ கிரட்சுகள் மற்றும் இதர துணைக்கருவிகள் முகாமிற்கு வந்திருந்தவர்களின் தேவைக்கு ஏற்றவாறு முற்றிலும் இலவசமாக வழங்கப்பட்டது. முகாமை ஸ்பார்க் மிண்டாவின் சமூகப் பொறுப்புக்கான திட்டத் தலைவர் பிரவீன் பொறுப்பேற்று நடத்தினார்.

# ரூ.50 கோடி மதிப்பீட்டில் ஓசூரில் ஆலை அமைக்கிறது பிஎஃப்டபிள்யூ நிறுவனம்

சென்னை, அக்.6

பெரு நிறுவனங்களுக்கான தயாரிப்பு தொழில்நுட்பங்களை அளிக்கும், பிஎப்டபிள்யூ நிறுவனம் தமிழ்நாட்டில் புதிய ஆலையை அமைக்க உள்ளது. ஓசூரில் ரூ.50 கோடி முதலீட்டில் இந்த ஆலை அமைய உள்ளது. தமிழ்நாடு அரசு, தொழில் நிறுவன அனுமதி களுக்கு ஒற்றைச் சாளர முறையை அறிமுகப்படுத்திய பின்னர், முதன் முதலில் ஆன்லைன் வழியாகவே அனைத்து அனுமதி களையும் பெற்ற முதல் நிறுவனமாக பிஎப்டபிள்யூ உள்ளது. இந்த நிறுவனம், தயாரிப்பு நிறுவனங்களுக்கு, செயற்கை நுண்ணறிவு தொழில்நுட்பங்களை அளிப்பதில் இந்திய அளவில் மிகப் பெரிய நிறுவனமாகும். தமிழ்நாட்டின் எதிர்கால தொழில்துறை வளர்ச்சிக்கு ஏற்ப புதிதாக இங்கு ஆலை அமைக்க திட்டமிட்டுள்ளது.

நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் ரவி ராகவன் கூறுகையில், இந்தியாவில் தொழில்துறையில் செயற்கை நுண்ணறிவு தொழில் நுட்பத் துக்கான தேவை அதிகரித்து வருகிறது. இதற்கு ஏற்ற தொழில் நுட்ப தீர்வுகளை அளிக்கத் தயாராக உள்ளோம் என்றார். முக்கியமாக இந்த தொழிற்சாலைக்கான அனுமதியை ஒற்றைச் சாளர முறையில் ஆன்லைன் வழியாகவே பெற்றுள்ளோம் என்று கூறினார்.




சென்னையில், விவோ ப்ரோ கபடி சீசன்-6 கோப்பை அறிமுக நிகழ்ச்சியில் கலந்து கொண்ட அனைத்து அணிகளின் கேப்டன்கள்.

# நாள் ஒன்றுக்கு 5ஜிபி டேட்டா ஜியோவின் புதிய திட்டம் அறிமுகம்




புது தில்லி, அக்.6

வாடிக்கையாளர்களைக் கவரும் வகையில் நாள் ஒன்றுக்கு 5ஜிபி டேட்டா தரும் புதிய திட்டத்தை அறிமுகம் செய்துள்ளது ஜியோ நிறுவனம். ஜியோ வாடிக்கையாளர்கள் தற்சமயம் ரூ.799க்கு ரீசார்ஜ் செய்தால் தினசரி 5ஜிபி டேட்டா வீதம் 28நாட்களுக்கு பயன்படுத்த முடியும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது, இந்த திட்டத்தில் இலவச கால் அழைப்புகள் மற்றும் ரோமிங் போன்ற சலுகைகளும் வழங்கப்படுகிறது. இத்திட்டத்தில் தினசரி 100 எஸ்எம்எஸ் பயன்படுத்த முடியும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஜியோ அறிவித்துள்ள ரூ.799 ரீசார்ஜ் திட்டம் பொறுத்தவரை இந்தியாவில் உள்ள அனைத்து வாடிக்கையாளர்களும் பயன்படுத்த முடியும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. ஏல்டெல் நிறுவனம் வழங்கும் ரூ.799 திட்டதில் நாள் ஒன்றுக்கு 4ஜிபி டேட்டா வழங்கப்படுகிறது, குறிப்பாக இந்த திட்டத்தை 28 நாட்கள் பயன்படுத்த முடியும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. மேலும் இலவச எஸ்எம்எஸ், கால் அழைப்புகள், ரோமிங் போன்ற பல்வேறு சலுகைகள் வழங்கப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

வோடஃபோன் வழங்கும் ரூ.799 திட்டத்தில் தினசரி 1.4ஜிபி டேட்டா வழங்கப்படுகிறது, மேலும் இந்த திட்டத்தை 28 நாட்களுக்கு பயன்படுத்த முடியும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. குறிப்பாக இலவச கால் அழைப்புகள், எஸ்எம்எஸ், ரோமிங் போன்ற பல்வேறு சலுகைகள் வழங்கப்படுகிறது.

ஜியோ அறிவித்துள்ள ரூ.498/-திட்டதில் தினசரி 2ஜிபி டேட்டா வீதம் 91-நாட்களுக்கு பயன்படுத்த முடியும், மொத்தமாக இந்த திட்டத்தல் 182ஜிபி டேட்டாவை பயன்படுத்த முடியும். மேலும் எஸ்டிடி, லோக்கல் கால் அழைப்புகள் மற்றும் ரோமிங் அழைப்புகள் இலவசமாக வழங்கப்படுகிறது. குறிப்பாக இந்த திட்டத்தில் தினசரி 100எஸ்எம்எஸ் கிடைக்கும்.

# அமெரிக்க தடையை மீறி ஈரானிலிருந்து கச்சா எண்ணெய் இறக்குமதி

## மத்திய அரசு திட்டம்



புது தில்லி, அக்.6

அமெரிக்காவின் தடையையும் மீறி ஈரானிலிருந்து 90 லட்சம் பேரல் கச்சா எண்ணெய்யை நவம்பர் மாதத்தில் இந்தியா இறக்குமதி செய்யவுள்ளது. ஈரான் மீது அமெரிக்கா பொருளாதாரத் தடை விதித்துள்ள நிலையில், பிற நாடுகளும் இதை கடைபிடிக்க வேண்டும் என கேட்டுக் கொண்டுள்ளது. ஈரான் மீதான தடையானது வரும் நவம்பர் 4ம் தேதி முதல் அமலுக்கு வருகிறது. இந்நிலையில் இந்தியா, நவம்பர் மாதத்தில் ஈரானிடமிருந்து 90 லட்சம் பேரல் கச்சா எண்ணெய்யை இறக்குமதி செய்வதாகத் தெரிவித்துள்ளது. இதில் இந்தியன் ஆயில் கார்ப்பரேசன் 60 லட்சம் பேரல்களும், மங்களூர் ரிஃபைனரி மற்றும் பெட்ரோ கெமிக்கல் நிறுவனம் 30 லட்சம் பேரல்களும் வாங்குகின்றன.

அமெரிக்காவின் பொருளாதார தடை காரணமாக சர்வதேச அளவில் தொடர்ந்து கச்சா எண்ணெய் விலை உயர்ந்து வருகிறது. இது இந்தியாவிலும் எதிரொலிக்கிறது. இந்நிலையில் அமெரிக்காவின் தடை உத்தரவின்படி ஈரானிடமிருந்து கச்சா எண்ணெய் இறக்குமதி செய்வதை நிறுத்தினால் இந்தியாவில் நெருக்கடி மேலும் அதிகரிக்கும். இதனால் நவம்பரில் ஈரானிடமிருந்து எண்ணெய் இறக்குமதி செய்ய முடிவு செய்யப் பட்டுள்ளதாக தகவல்கள் வெளிவந்துள்ளன.

# அதிரடி விலை குறைப்பில் சாம்சங் கேலக்ஸி எஸ்8



புது தில்லி, அக்.6

இந்திய மொபைல் சந்தையில் சாம்சங் கேலக்ஸி எஸ்8 ஸ்மார்ட்போன் மாடல் அதிக வரவேற்பை பெற்றுள்ளது. வரும் அக்டோபர் 10ம் தேதி முதல் 14ம் தேதி வரை நடைபெறும் ஃபிளிப்கார்ட் பிக் பில்லியன் சேல் மூலம் இந்த சாதனத்தை குறைந்த விலையில் வாங்க முடியும்.

சாம்சங் கேலக்ஸி எஸ்8 ஸ்மார்ட்போனின் முந்தைய விலை ரூ.45,990 ஆக இருந்தது ஃபிளிப்கார்ட் பிக் பில்லியன் சேல் மூலம் விலைகுறைக்கப்பட்டு ரூ.29,990க்கு விற்பனை செய்யப்படும் என்று அறிவிப்பு வெளிவந்துள்ளது. கேலக்ஸி எஸ்8 ஸ்மார்ட்போன் பொதுவாக 5.8-இன்ச் பெசல்-லெஸ் டிஸ்பிளே வடிவமைப்புடன், 1080 பிக்சல் தீர்மானம் கொண்டுள்ளது.

கேலக்ஸி எஸ்8 ஸ்மார்ட்போனில் ஆக்டோ-கோர் எக்ஸிநோஸ் 8895 செயலியுடன், ஆண்ட்ராய்டு இயங்குதளத்தை கொண்டுள் ளது. இந்த ஸ்மார்ட்போனில் 12எம்பி டூயல் கேமரா மற்றும் செல்பீ கேமரா 8மெகாபிக்சல் எனக் கூறப்படுகிறது. மேலும் டூயல் எல்இடி ஃபிளாஷ் ஆதரவு இவற்றில் இடம்பெற்றுள்ளது. வைபை, ப்ளூடூத், 4ஜி வோல்ட், ஜிபிஎஸ், யுஎஸ்பி டைப்-சி, என்எப்சி, மைக்ரோ யுஎஸ்பி, டூயல்-சிம் போன்ற இணைப்பு ஆதரவுகள் இவற்றுள் அடக்கம். கேலக்ஸி எஸ்8 ஸ்மார்ட்போனில் 3000எம்ஏஎச் பாஸ்ட் சார்ஜ் கொண்ட பேட்டரி பொறுத்தப்பட்டுள்ளது.

# சுஸுகி வி-ஸ்ட்ரோம் 650 எக்ஸ்டி பைக்
# விற்பனைக்கு அறிமுகம்



புது தில்லி, அக்.6

சுஸுகி வி-ஸ்ட்ரோம் 650 எக்ஸ்டி பைக் இந்தியாவில் விற்பனைக்கு அறிமுகம் செய்யப்பட்டு இருக்கிறது. அட்வென்ச்சர் மற்றும் அட்வென்ச்சர் டூரர் ரக பைக் மாடல்களுக்கு இந்தியாவில் வரவேற்பு அதிகரித்து வருகிறது. அந்த வகையில், லேட்டஸ்ட் வரவு சுஸுகி வி- ஸ்ட்ரோம் 650 எக்ஸ்டி மோட்டார்சைக்கிள் ஆகும். சுஸுகி வி-ஸ்ட்ரோம் 1000 மோட்டார்சைக்கிளின் டிசைன் தாத் பரியங்களுடன் நீண்ட தூர சாகச பயணங்களுக்கு ஏற்ற மாடலாக வந்துள்ளது. ஆஃப்ரோடுகளிலும், சாதாரண சாலைகளிலும் கௌகரியமான பயணத்தை வழங்கும் விதத்தில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்த பைக்கில் 'வி' வடிவ இரட்டை சிலிண்டர்கள் கொண்ட 645சிசி எஞ்சின் அதிகபட்சமாக 70 பிஎச்பி பவரையும், 62.3 என்எம் டார்க் திறனையும் வழங்க வல்லது.

இந்த பைக்கில் முன்புறத்தில் டெலிஸ்கோப்பிக் ஃபோர்க்குகள் கொண்ட சஸ்பென்சனும், பின்புறத்தில் அட்ஜெஸ்ட் வசதியுடன் கூடிய மோனோஷாக் அப்சார்பரும் உள்ளன. ஈஸி ஸ்டார்ட் சிஸ்டம், டிஜிட்டல்- அனலாக் இன்ஸ்ட்ரூமென்ட் க்ளஸ்ட்டர், 3 ஸ்டேஜ் டிராக்ஷன் கன்ட்ரோல் சிஸ்டம் ஆகியவையும் இந்த பைக்கின் முக்கிய சிறப்பம்சங்களாக கூறலாம். இந்த பைக்கிற்கான முக்கிய உதிரிபாகங்கள் இறக்குமதி செய்யப்பட்டு புதிய சுஸுகி வி- ஸ்ட்ரோம் 650 எக்ஸ்டி பைக் ரூ.7.46 லட்சம் எக்ஸ்ஷோரூம் விலையில் விற்பனைக்கு அறிமுகம் செய்யப்பட்டு இருக்கிறது. ரூ.50,000 முன்பணத்துடன் இந்த பைக்கிற்கு ஏற்கனவே முன்பதிவு துவங்கிவிட்டது.

# 5 லட்சம் எகோ மினிவேன்கள் விற்பனை மாருதி சுஸுகி நிறுவனம் சாதனை



புது தில்லி, அக்.6

5 லட்சம் எகோ மினிவேன்களை விற்பனை செய்து மாருதி சுஸுகி நிறுவனம் புதிய மைல்கல் ஒன்றை எட்டியுள்ளது. இந்தியாவின் முன்னணி கார் உற்பத்தி நிறுவனமான மாருதி சுஸுகி, எகோ எம்பிவி ரக வாகனத்தை, கடந்த 2010ம் ஆண்டு அறிமுகம் செய்தது. இந்தியாவில் மிகவும் குறைவான விலையில் விற்பனை செய்யப்படும் எம்பிவி ரக வாகனம் எகோ ஆகும். இதனால் இதன் விற்பனை சக்கை போடு போட்டு வருகிறது. 5 லட்சம் எகோ எம்பிவி வாகனங் கள் விற்பனை என்பதுதான் அந்த புதிய மைல்கல். இந்த சாதனையை படைக்க எகோ எம்பிவி 8 ஆண்டுகளை எடுத்து கொண்டுள்ளது.

மாருதி சுஸுகி எகோ மினி வேனில் பொருத்தப்பட்டுள்ள 1,200 சிசி பெட்ரோல் இன்ஜின், 69 பிஎச்பி பவரையும், 101 என்எம் டார்க் திறனையும் வழங்கவல்லது. இந்த இன்ஜினுடன் 5 ஸ்பீடு மேனுவல் கியர் பாக்ஸ் ஸ்டாண்டர்டாக இணைக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் விற்பனை செய்யப்பட்ட ஒட்டுமொத்த எகோ மினிவேன்களில் 17 சதவீதம் சிஎன்ஜி வேரியண்ட்கள்தான் என்பது குறிப்பிடத்தகுந்த விசயம். சிஎன்ஜி வேரியண்ட்களில் லிட்டருக்கு 21.8 கிலோ மீட்டர் மைலேஜ் கிடைக்கும்.

அதே நேரத்தில் பெட்ரோல் வேரியண்ட்கள் ஒரு லிட்டருக்கு 16.2 கிலோ மீட்டர் மைலேஜை வழங்குகின்றன. மாருதி சுஸுகி எகோ மினிவேனானது இந்தியாவில், 3.65 லட்சம் முதல் 4.73 லட்ச ரூபாய் (எக்ஸ் ஷோரூம், பெங்களூரு) வரையிலான விலையில் விற்பனை செய்யப்படுகின்றன.